27th April 1960]

### *Police constables*

* 840 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா —

(அ) போலீஸ் கான்ஸ்டபிள்கள் வேலைக்கு ஆட்கள் வருவதில்லை என்பது உண்மையா ?

(ஆ) அப்படியாயின் அதற்காக சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ). No, Sir.

(ஆ) Does not arise.

SRI S. M. ANNAMALAI : தொழிற்சாலைகளில் வேலைசெய்கிறவர்களுக்கு, போலீஸ் உத்தியோகத்தில் கிடைப்பதைவிட அதிகச் சம்பளம் கிடைக்கிறது என்கிற காரணத்தினால், போலீசுக்கு அதிக ஆட்கள் வருவதில்லை என்று சென்னை போலீசு கமிஷனர் ப்ரஸ் ரிபோர்ட்டர்ஸ் கான்பரன்ஸில் சொல்லியிருப்பது அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப் பட்டதா ? அதன் மேல் எடுத்த நடவடிக்கைகள் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் குறிப்பிட்ட விஷயம் என் கவனத்திற்குக் கொண்டு வரப்படவில்லை. போலீஸ் கான்ஸ்டபிள் ரெக்ரூட்மெண்டுக்கு அதிகமான ஆட்கள் வருவதில்லையென்று சொல்வது சரியில்லையென்று பதில் சொன்னேன்.

### *Special Engineering Division*

* 841 Q.—SRI M. KANDASAMI PADAYACHI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) காவேரி நதியின் மேட்டூர் தேக்கத்திற்கு முன்புறத்திலிருந்தும் பின்புறத்திலிருந்தும் பெண்ணையார், சாத்தனூர் நீர்த்தேக்கத்திற்கு தண்ணீர் கொடுக்க முடியுமா என்பதையும், சாத்தனூர் நீர்த்தேக்கத்திலிருந்தும், வலதுபுறம், கள்ளக்குறிச்சி தாலுகா, பாக்கம்—சங்கராபுரம், ரிஷிவந்தியம் பிர்க்கா கிராமங்களுக்கும் உளுந்தூர்ப்பேட்டை சப் தாலுகா, எலவாசனூர், உளுந்தூர் பிர்க்காக்களுக்கும் நீர்ப்பாசனம் செய்ய தண்ணீர் கொடுக்க முடியுமா என்பதையும் ஆராய்வதற்கு 1960–61-ல் Special Engineering Division-ஐ ஏற்படுத்த ஆலோசனை ஏதாவது உண்டா ?

(ஆ) மேற்படி Special Engineering Division உத்தேசிக்கப் பட்டிருக்கும் சின்னசேலம் Steel Plant-க்கு Filter water குழாய்கள் மூலமாக சப்ளை செய்ய உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI M. KANDASAMI PADAYACHI : தலைவர் அவர்களே, வரண்ட பிரதேசங்களான கள்ளக்குறிச்சி, திருக்கோவிலூர் பகுதிகளுக்கு, காவேரித் தண்ணீர் வருவதற்கு தக்க வசதி செய்து, அது எப்பொழுது வரும் என்று அரசாங்கம் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : சர்க்கார் ஏற்கனவே பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது, காவேரி நதியிலிருந்து பெண்ணாற்றுக்குத் தண்ணீர் கொண்டு வரலாமா என்று; அது முடியாது, அதிகச் செலவாகும், 40 மைலைக் கடக்க வேண்டும் என்று ஏற்கனவே முடிவு செய்திருக்கிறார்கள்.